10th September 1958]

Sri A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that more than sixty per cent of the tanneries in South India have closed down for want of raw hides?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, the Government are aware of the closure of tanneries. But they are not aware that it is due to lack of raw hides and skins.

*Government Estate*

*** 131 *Q.*—Sri N. R. THIAGARAJAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சென்னை கூவம் நதியிலிருந்து சேப்பாக் வரையிலுள்ள மவுண்ட் ரோட் சர்க்கார் எஸ்டேட்டில் (**Government House Estate**) மவுண்ட் ரோடை ஒட்டிய பகுதியில் கடைகள் கட்டி வாடகைக்கு விட அல்லது கடை கட்டிக் கொள்பவருக்கான மனையையாவது குத்தகைக்குவிட சர்க்காருக்கு ஏதேனும் உத்தேச முண்டா ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

Sri A. A. RASHEED : Sir, is there any proposal to release a portion of the Government Estate land in Mount Road to widen the Mount Road from 'The Hindu' office to the Elphinstone Talkies?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

*Kalainesan*

*** 132 *Q.*—Sri A. VEDARATHNAM :** கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கலைநேசன் பத்திரிகையின்

(1) ஆசிரியர்,

(2) பிரசுரிப்பவர் ஆகிய இவர்களின் பேரில் எத்தனை தடவை இது வரையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ?

(ஆ) எந்தெந்த குற்றத்திற்காக ?

(இ) அவற்றின் முடிவென்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Seven.

(*b*) Publication of obscene matter.

(*c*) Conviction secured on all the seven occasions.

*Irrigation and cultivation*

*** 133 Q.—Sri A. VEDARATHNAM :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் ஜில்லா, பட்டுக்கோட்டை தாலூகாவில் உள்ள ஏரிப் புரக்கரை, தம்பிக்கோட்டை கிராமங்களில் உள்ள அலையாத்திக்காடு எனப் படுகிற பெரிய நிலப்பரப்பை சாகுபடிக்கேற்றதாக்க உத்தேசம் ஏதேனும் உண்டா ?

(ஆ) வடிகால் பாதையைச் சீர்திருத்துவது மூலமாக மேற்சொன்ன தாலூகாவில் உள்ள நசுனியாறு நதியின் வெள்ளப் பெருக்கை சமுத்திரத் தில் சேர்த்துவிடுவதற்காக பரிசீலனை ஏதாவது செய்யப்பட்டதா ?

(இ) நசுனியாறு நதியின் வடிகாலை சீர்திருத்தி, அதன் தண்ணீரை அலையாத்திக்காடு எனப்படுகிற காட்டுப்பிரதேசத்தின் நீர்ப்பாசனத்துக்காக வும் சாகுபடிக்காகவும் உபயோகித்துக்கொள்வதென்று அரசாங்கத்தார் உத்தேசித்திருக்கிறார்களா ?

[10th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Detailed investigation is yet to be made.

(*c*) Construction of an anicut across Nasunniar and utilizing the flow in the river is under consideration.

SRI A. VEDARATHNAM : கனம் அமைச்சர் அவர்கள் இப்பொழுது சமீபத்தில் ஏற்பட்டிருக்கிற சிறிய நீர்ப்பாசன வசதிக் கமிட்டியின் தலைவராக இருக்கிற காரணத்தினாலும் இதுபோன்ற நிலங்கள் சுமார் 40,000 ஏக்கர் தஞ்சையில் இருக்கிற காரணத்தினாலும் இப்படி சிறிய திட்டங்களை எடுத்து 500, 1000 ஏக்கர் என்று அபிவிருத்தி செய்வதை விட ஒரு பெரிய திட்டம் ஏற்படுத்தி அதன் மூலம் எல்லா நிலங்களையும் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு ஏதாவது ஒரு நல்ல திட்டம் அமைக்க சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டத்தைப் பொறுத்த மட்டில் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதோடு இந்த நிலங்களை சாகுபடி செய்வதற்கு அவைகள் அதற்கு லாயக்காக இருக்கின்றனவா என்று கவனிக்க வேண்டியிருக்கிறது. விவசாய இலாகா இதை பரிசீலனை செய்ததில் முதலில் பசுந்தாள் பயிர் செய்து அதற்கப்புறம் சாதாரண சாகுபடிக்கு லாயக்காக்க வேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே இவைகளை எல்லாம் கவனிக்க வேண்டியிருக்கிறது.

SRI K. ANBAZHAGAN : தஞ்சை மாவட்டத்தில் பட்டுக்கோட்டை வட்டாரத்தில் நசுனியாறு தண்ணீர் தேங்குகிற காரணத்தினாலும் அது கடலில் சென்று கலக்க வேண்டிய வாய்க்கால்கள் இல்லாத காரணத்தினாலும் பல குறைபாடுகள் அந்த வட்டாரத்தில் வளர காரணமாகிறது. ஆகவே உடனடியாக அங்கு தண்ணீர் தேங்காமல் இருக்க வழி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டுதான் இருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : Sir, may I know the area in acres referred to under clause (*a*), viz., Alayathikkadu in Eripurakarai and Thambikkottai villages in Pattukkottai taluk?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, it refers to Alayathikkadu forest area.

MR. SPEAKER : I think the hon. Member wants to know the extent of the area. If the information is readily available the Hon. Minister can give it. Am I right, Mr. Srinivasa Iyer?

SRI R. SRINIVASA IYER : Yes, Sir. I want to know the extent of the area.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It will cover an area of about 2,000 acres.

## *Pandya State*

* 131 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி ஜில்லாக்கள் கொண்ட பாண்டிய ராஜ்யம் அமைக்க நடைபெறும் முயற்சி சர்க்காருக்குத் தெரியுமா ?